# பதி பசு பாச விளக்கம்.

பதியென்றும் பசுவென்றும் பாசமென்றும் பதார்த்தம் மூன்று, பதியாவது சிவன் : பசுவாவது ஆன்மா; பாசமாவதுமல மாயை கன்மங்கள். இது தொகை. வகை சொல்லுவாம். இந்தப் பதார்த்தம் மூன்றும் சித்தென்றும், சடமென்று மிருவிதமாம். அதிற் சித்தைந்து வகையா யிருக்கும் அதாவது அனா திமுத்தன் ஆதிமுத்தன், அபரமுத்தன், சீவமுத்தன், சீவான் மாவென்றைந்துவகை. அதிலே முற் சொல்லிய அனாதிமுத்தன் பரமசிவன். அவனுடைய கிரியா சத்தி சங்கரா வியாபார பேத சதாலே சம்புபக்ஷ நவந்திருபேத மென்று சொல்லப்பட்ட ஒன்பது பேதமுண்டு. அதற்குவகை பிரும்மா, விஷ்ணு, ருத்திரன், மயேசுரன் சதாசிவன், விந்து, நாதம், பராசத்தி, பரமசிவமென்று ஒன்பது பேதம்.

இந்த ஒன்பது சிவபேத சிவனுக்கும் கிருத்தியமாவது பிருதிவியாதி சிவதத்துவ பரியந்தம் பதினாறண்டங் கூடிய பிரக்கிரியையண்டமென்னும நந்தபிரக்கிரியை யண்டங்களிலே, சத்திய லோகமுதல் அனாசிருத புவனமந்தமான தானங்களிலே, சுத்தமாயை, யசுத்தமாயைகளிலே யுண்டாகிய திவ்வியாதி திவ்விய வாத்தவமூர்த்திகளாயிருக்கும். அணுநவந்தருபேதமென்று சொல்லப்பட்ட பிரும்மா முதற்பரசிவமூர்த்தி பரியந்தம் அதிட்டானம் பண்ணுகிற கிருத்தியம். சம்பு பட்ச நவந்தருபேதத்தில் பிரும்மா முதனான்குஞ் சகளம். சதாசிவம்சகள நிட்களம், விந்து முதனான்கும் நிட்களம். சம்பு பட்சத்திற்கு மணுபக்ஷ பிரும்மாதிகளை யொட்டித் தியான சமாதிகணிமித்தம் சம்பு பக்ஷபதிற்குக் கற்பனை சரீரமாகவவனது சமவேதசக்தியினாலே கற்பிக்கப்படும் இந்த ஒன்பதிற்குங்காரணம் சகளமாகிய அதிகாரரெனவும், சகளநிட்களமாகிய போகரெனவும் அமரநிட்களராகிய இலையரென்றும் மூன்று விதமாயிருப்பார். அதிலே இலயரைச் சொல்லுவாம்.

சிருட்டியாதி தூலபஞ்சகிருத்தியங்களை விட்டிருக்குங் கிரியா சக்திக்குச் சுவாபகாலத்திலே சூக்குமபஞ்ச கிருத்தியத்தையுமுடித்து முத்திவெற்றியாகிறவனுக்கிரக கிருத்தியமுமுடிக்குமியற்கையை பார்க்கிலும் நீர்விகற்பவறிவு மாத்திரத்தைப் பண்ணுஞ் ஞானசக்தி மாத்திரையா யிருத்தல் இலையமாம்.

சிவனென்றும், இலயரென்றும், சுத்தரென்றும், நிட்களரென்றும், இலயருக்கு நான்குபெயரெனவறிக.

சுத்தமாயையை யதிட்டித்து முத்திபண்ணுகிற கிருத்தியத்தைக் குறித்து அன திக்கிறாந்தவயரென்றும், விந்துவை யதிட்டியாமல் சிவதத்துவத்தை யொட்டிப் பண்ணுகிற கிருத்தியத்துக்கு அதிக்கிறாந்தலயரென்றும் பேரென்றறிக.

போகரைச் சொல்லுவாம். சூட்சுமகிருத்தியத்தைப் பண்ணிக்கொண்டிருந்த கிரியாசக்தி தூலபஞ்ச கிருத்தியத் திலேயுன்முகமாய் விந்துவையதிட்டித்து

ஞானசக்தியாயும்கிரியா சக்தியாயுமிருந்த போது போகர், உத்தியுக்தரென்றும், போகரென்றும் சதாசிவ ரென்றும், சகளநிட்களரென்றும்நான்குபெயர்பெறுவர்

அதிகாரரைச் சொல்லுவாம். தூலபஞ்ச கிருத்தியத்திலே யுன் முகமாயிருந்தகிரியாசத்திக்குப் பின்னிது இப்படியாகக்கடவதென்று சங்காரத்தைப் பண்ணுஞ் சங்கற்ப விச்சா சத்திரூபமாயிருந்துள்ளளவில் ஈசனென்றும், அதிகாரரென்றும், சகளரென்பம், பிரவிருத்தரென்றும் அதிகாரருக்கும் நான்கு பெயருண்டு,

இந்த வதிகார சிவசங்கற்பத்தாலே சுத்தமாயையினுடைய க்ஷத்தபதார்த்தத்திலிருந்து சிவதத்துவ முதற் சுத்த வித்தையினாகுந்தத்துவ தாத்துவிக அண்ட புவன சூக்கும தேக, தூலதே கசாதாரண, வசாதாரண, சாதாரண சாதாரண சத்தராக சகலமும் வைந்தவ காரியங்களுமுண்டாம். பின்னந்தப்பிரகாரம் கால சிருட்டியிலே, அவரேவலாலே அநந்ததேவர் சங்கற்பத்தினாலே சுத்தமாயையி னின்றும் ஏழிருபத்துனான்காயிருக்கும் சுத்தமாயா காரியதத்துவதா சதுவக வண்ட புவனசூக்கும் தேக தூல தேக சாதாரண சாதாரண, சாதாரண சகலமு முண்டாம்.

பின் மத்திமகால சிருட்டியிலே யனந்தேசுர ஏவலாலே ஸ்ரீகண்ட மூர்த்தி சங்கற்பத்தாலே பிரகிருதியினின்றும் குணமுதற் பிருதிவியீறாகு மண்டபுவன தூலதேக போக்கிய வத்துக்களுண்டாம். பின்னந்த ஸ்ரீ கண்டரேவலாலே குணநிலைய பிரும்ம விஷ்ணுக்கள் சங்கற்பத்தினாலே ஏடிண்டத்தினும், பிரதமசிருட்டியிலே யோரண்டத்தினும், தூலதேக போக்கியவஸ்துக்கள் சிருட்டிதிதிகளுண்டாம் பிரும்மாண்ட நிலையகுணநிலைய விருபிரும்மாவுக்கும் தூலதேக போக்கியப் பொருள் சிருட்டிகிருத்தியம். பிரும்மாண்டநிலையகுண நிலயவிருவிட்டுணுக் கட்கும் தூலதேகப்போக்கியப் பொருள் திதி கிருத்தியம். பிருமாண்ட நிலையகாலாக்கினிருத்திரருக்கு தினப்பிரளயத்தாலே தம திருப்புத் தொடங்கிச் சொர்க்க பரியந்தம் சங்கார கிருத்தியம்.

குணநிலைய ஸ்ரீகண்டருக்கு பிருகிருதிக்குக் கீழஞ்சு கிருத்தியம் நடந்தாலும், மிச்சிரத்திர சங்காரம் நடவா திருந்தாலும், மத்திமப் பிரளயத்தி லெட்டண்டமட்டுக்குஞ் சங்கார கிருத்தியம் பிரதானம்.

அநந்தே சுரனென்னு மயேசுரருக்கு அசுத்தமாயைக்குக் கீழஞ்சு கிருத்தியமும் நடந்தாலும், சுத்தமாயா காரியத்திலே திரோதானம் நடவாதிருந்தாலும் திரோதான கிருத்தியம் பிரதானம்.

சாதாக்கிய தத்துவவாச அணு சதாசிவருக்கு அனுக்கிரக கிருத்தியமொன்றுமே. இப்படியணுபட்சபஞ்ச கிருத்தியமும் பிரதானம். இப்படிச் சுத்தத்திற்றாமாயும், அசுத்தத்தி லனந்தாதிகளைக்கொண்டும் பஞ்சகிருத்தியமும் பண்ணுவித்தலாலே சம்புபக்ஷ திகார சிவன் ஏவுதற் கர்த்தா : அனுபக்ஷவணுசதாசிவவனந்தேசுர ஸ்ரீகண்ட திரயம், பிரும்மவிட்டுணுசதுட்டயம், எல்லாமியற்றுதற் கர்த்தாக்களென்றறிக.

இப்படி இலய போகவ திகார ராயிருந்து தூலபஞ்ச கிருத்தியம், சூக்கும பஞ்சகிருத்தியமும் பண்ணுவதெதன்பொருட்டு எனின், ஆன்மாக்கள் போக மோக்ஷமடையும் பொருட்டுக் கிருபையினாலே தனக்கொரு பிரயோஜனமுமின்றி ஆன்மாக்களே பிரயோஜனமடையும் பொருட்டென்றறிக.

பஞ்சகிருத்தியமாவது. மாயை, மகா மயைகளிலே சத்தி ரூபமா யொடுங்கியதத்துவங்களை சாத்துவிக குணாதிக்கத்தினாலே வெவ்வேறு ரூபங்களாக்குதற் சிருட்டி.

(தொடரும்)

இலக்கணவிளக்கபரம்பரை,
திருவாரூர், சோமசுந்தரதேசிகன்.

சித்தாந்தம் - 1912 ௵ - மே மீ